[14th March 1959

*Sri Ramalinga Chowdambiga Devasthanam, Thevaram*

* 799 *Q.*—Sri A. VEDARATHNAM (on behalf of Sri N. R. THIAGARAJAN) : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லாவில் தேவாரம் ஸ்ரீ ராமலிங்க சௌடாம்பிகை தேவஸ்தானத்தில் டிரஸ்டிகள் நியமிக்கப்பட்டார்களா ?

(ஆ) அந்த டிரஸ்டிகள் வசம் கோயில் நிர்வாகத்தை H. R. E. போர்டு இன்னும ஒப்புவிக்காத காரணம என்ன ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) The area Committee of the Madurai Division has appointed three non-hereditary trustees for the devasthanam.

(*b*) The hereditary trustees have filed a writ petition in the High Court against the appointment of non-hereditary trustees and the High Court has granted stay of the appointment of the non-hereditary trustees pending orders on the writ petiton.

*Fruit Research Station in Periyakulam taluk*

* 800 *Q.*—Sri M. K. SOMASUNDARAM (on behalf of Sri V. SANKARAN) : Will the Hon. the Minister for Home be pleased to state how far the proposal to start a Fruit Research Station in the Periyakulam taluk has been implemented?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : The land required for the establishment of the Fruit Station has been acquired and taken possession of by the Agriculture Department on 25th July 1958. The work of initiating and conducting normal field experiments has been put under way.

Sri A. R. SUBBIAH MUDALIAR : இந்தப் பழத் தோட்டத்தில் என்னென்ன பழங்கள் விளைவிக்கப்படுகிறது.

The Hon. Sri M. BHAKTAVATSALAM : A total of 139 grafts in 21 varieties of mango, plants for 15 grape varieties, and 67 plants of miscellaneous fruits, etc., were assembled till the end of December 1958.

Sri M. JAGANNATHAN : What is the extent of the land acquired for this Fruit Station, Sir?

The Hon. Sri M. BHAKTAVATSALAM :—The land acquired was 47 acres 47 cents.

*Legal aid to destitute women*

* 801 *Q.*—Srimathi A. S. PONNAMMAL (on behalf of
9 a.m. Srimathi RAJATHI KUNCHITHAPATHAM) : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கணவனால் கைவிடப்பட்ட அபலைப் பெண்களுக்கு தங்களுடைய கணவன் சொத்தில் தங்களுக்குள்ள பங்கை கோர்ட் மூலம் தான் பெற முடியும் என்ற நிலை வரும்போது, இம் மாதிரியான ஆதரவற்ற பெண்களுக்கென்று ஊதியம் பெறுமல் கோர்ட்டில் அவர்களுக்காக வாதாடுவதற்கு வக்கீல்களை சர்க்காரே ஏற்படுத்த உத்தேசமுண்டா ?

14th March 1959]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is no such proposal before the Government.

SRIMATHI A. S. PONNAMMAL : அனேகப் பெண்கள் இவ்வாறு கணவரால் கைவிடப்பட்டு, கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். எனவே இப்பிரச்னையை மறுபரிசீலனை செய்து, அவர்கள் கோர்டில் வாதாடும்போது அரசாங்கமே அவர்களுடைய எல்லாச் செலவுகளையும் ஏற்றுக்கொள்ள வகை செய்ய அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM. வக்கீல் வைத்துக் கொள்ளப் பண வசதி அற்ற அபலைகள் வழக்குத் தொடரும்போது அவர்கள் சார்பில் சர்க்கார் வாதாட இப்போதே சட்ட ரீதியாக வாய்ப்பு இருக்கிறது. ஆகவே இதற்காக புதிய சட்டம் இயற்ற வேண்டியதில்லை.

SRI S. M. ANNAMALAI : இப்போது சாதாரணமாக "பாப்பர் ஸூட்" போடுவதற்குத்தான் சட்டம் இடம் கொடுக்கிற[illegible] ஆனால் பெண்கள் பணமில்லாமல் கஷ்டப்படுகிறார்கள். அப்படிப்பட்ட பெண்களுக்கு உதவி செய்ய சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மூலக் கேள்வி கணவனால் கைவிடப்பட்ட அபலைப் பெண்கள் கோர்ட்டில் வழக்குத் தொடரும்போது அவர்களுக்கு "பிரீ லீகல் அஸிஸ்டென்ஸ்" அளித்தது பற்றியது. நிதி வசதியற்ற பெண்களையும் திக்கற்ற பெண்களையும் பராமரிக்க பல ஸ்தாபனங்கள் இருக்கின்றன. அதற்கு சர்க்காரும் சில ஸ்தாபனங்களை நடத்தி வருகிறது. வழக்குத் தொடருவதைப் பொறுத்த வரையில், வக்கீல் வைத்துக்கொள்ளப் பணவசதி அற்றவர்கள் சார்பில் சர்க்கார் வாதாட இப்போது சட்டம் இடம் கொடுக்கிறது.

SRI T. T. DANIEL : Now that defence is [illegible] even for criminals in certain cases, will the Government think of evolving a procedure by which legal assistance can be given to these poor women who cannot otherwise get legal assistance by asking the Government Pleaders in the District Courts to conduct the cases for them?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, the Government do not consider it necessary.

SRI A. VEDARATHNAM : இவர்களுக்கு வேறு வக்கீல்கள் இல்லாதபோதிலும் இந்தக் கேஸ்களை சர்க்கார் வக்கீல்களே நடத்துவதற்கு வசதி செய்து கொடுக்கமுடியாதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதற்கு அவசியமில்லை என்று தான் அரசாங்கம் கருதுகிறது.

SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM : பெரிய பெயர் வாங்கிய டாக்டர்கள் கூட இதுபோன்ற தர்மசேவைகள் செய்யும் போது வழக்கறிஞர்கள் இதுபோன்ற சேவைகள் செய்ய முன்வராத காரணத்தால் இதுபோன்ற கேஸ்களில் வாதாடினால் வழக்கறிஞர்களுக்கு உத்தியோக உயர்வில் சலுகை உண்டு என்ற நியதியை சர்க்கார் கொண்டு வந்தால், இதுபோன்ற வழக்குகளில் வாதாட வழக்கறிஞர்கள் அதிகமாக முன்வருவதற்கு ஏதுக்கள் இருக்கின்றன என்பதை உணர்ந்து அதற்கு ஆவன செய்ய சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த மாதிரியான வழக்குகளில் வழக்கறிஞர்கள் அக்கறை எடுத்துக்கொள்ளமாட்டார்கள் என்று நான் நம்பவில்லை ; அக்கறை கொள்வார்கள் என்றே நம்புகிறேன். முக்கியமாக இளைஞர்களாக இருக்கும் வக்கீல்கள் இந்த மாதிரியான

[14th March 1959

வழக்குகளில் அக்கறை எடுத்துக்கொண்டு தங்கள் திறமையைக் காட்டு வார்கள் என்று நம்புகிறேன்.

*Formation of a road from Palani to Kodaikanal*

* 802. *Q.*—SRIMATHI A. S. PONNAMMAL (on behalf of SRI P. S. K. LAKSHMIPATHI RAJ): கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) பழனியிலிருந்து கொடைக்கானலுக்கு ரோடு போடுவது சம்பந்த மாக எதேனும் நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா ?

(ஆ) அப்படியானல், எந்தப் பகுதி வழியாக ரோடு போடும் உத்தேசம் இருக்கிறது ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (*a*) & (*b*) The matter is under consideration.

SRIMATHI A. S. PONNAMMAL: இந்த மாதிரி கொடைக் கானலுக்கும் பழனிக்குமிடையே ரோடு போடுவதாயிருந்தால் அது எத்தனை மைல் தூரம் இருக்கும், அதற்கு சர்க்கார் எவ்வளவு பணம் செல வழிக்கும் ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: இந்தக் குறுக்குப் பாதை 28 மைல் தூரம் இருக்கும். இதைப் போட 38 லட்ச ரூபாய் செலவாகும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

SRIMATHI A. S. PONNAMMAL: இந்த ரோடைப் போடும் வேலையை வெகு விரைவில் எடுத்துக்கொள்ள அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: நான் முதலில் கூறியபடி இத்திட்டம் ஆலோசனையில் இருக்கிறது.

*Headquarters Hospital, Vellore*

* 803 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI): கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

வேலூர் தலைமை மருத்துவ நிலையத்தில் 1958-ல் சராசரி அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்றவர்கள் (In-patients) எவ்வளவு பேர் ?

THE HON. SRI M. A. MANICKAVELU: 420 per day, Sir.

*Procurement of foodgrains*

* 804 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

ராஜாங்க உணவு தான்ய வர்த்தக திட்டத்தின் கீழ் தான்யக் கொள் முதல் செய்வதற்காக எந்தெந்த இடங்களிலிருக்கும் கூட்டுறவு சொசைட்டி களுக்கு சென்னை ராஜ்யத்தில் லைசென்ஸ்கள் வழங்கப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The Government have decided to procure two lakhs tons of rice during the current harvest and the following co-operatives in the State have been appointed as procuring agents:—

(1) The District Co-operative Supply and Marketing Societies or the Co-operative Wholesale Stores in all the districts except Tanjore;